[20th January 1961

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முக்கியமாக உற்பத்தி செய்கிற விவசாயிகளும், அதை வாங்கிச் சாப்பிடக் கூடிய பொது மக்களும், இருசாராருக்கும் விலைவாசி எவ்வளவு தூரம் சரசமாக இருக்க வேண்டுமென்பதை வைத்துக் கொண்டுதான் அப்போதைக்கப்போது ஏற்றுமதி செய்வது நிர்ணயிக்கப் படுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுமதி செய்யும் விஷயமாக, நமது ராஜ்யத்தை கலந்துதான் நிர்ணயிக்கப்படுகிறது என்று சொல்கிறார்கள். இதில் நான் தெரிந்து கொள்ள விரும்புவது, ஏற்றுமதி செய்யக் கூடிய வியாபாரிகளுக்கு இன்ன அளவிற்குத்தான் ஏற்றுமதி செய்யலாம் என்று கட்டுப்பாடு விதிக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்போதைக்கப் போது மொத்தத்தில் எவ்வளவு ஏற்றுமதி செய்வது, எந்தெந்த வியாபாரிகள் மூலம் அல்லது கூட்டுறவு சங்கங்கள் மூலம் ஏற்றுமதியாவது என்பதெல்லாம் நிர்ணயிக்கப்பட்டு, வேண்டிய கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI R. KRISHNASAMI NAIDU : மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி இந்த மூன்று ஜில்லாக்களின் அனுபவத்தை வைத்துப் பார்க்கும்போது மிளகாய் சாகுபடி செய்யும் விவசாயிகள், எக்கர் ஒன்றுக்கு 500 முதல் ஆயிரம் வரை செலவிட்டுத்தான் அந்த விவசாயத்தை செய்ய முடிகிறது. கிணற்றுத் தண்ணீர் இரவைப் பாசன வசதியுள்ள இடத்தில்தான் இந்த சாகுபடி செய்யப்படுகிறது. உற்பத்தியாளருக்கு பாதகம் அல்லாத முறையில் இந்த ஏற்றுமதி அளவை சர்க்கார் நிர்ணயித்து வருகிறார்களா ? அதுவும் கவனத்தில் வைத்துக் கொள்ளப் படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுபற்றியும் நான் சற்று முன்பு குறிப்பிட்டேன். ஏற்றுமதியை அடியோடு நிறுத்துவது என்றால், அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட்ட ஜில்லாக்களில் உள்ள மிளகாய் உற்பத்தி செய்கிற விவசாயிகள் எங்களுக்கு விலை குறைந்து விடும் என்று புகார் சொல்கிறார்கள்.

*Teachers' Pension Scheme*

* 28 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆசிரியர் பென்ஷன் திட்டமானது "Secondary Grade' L.T., B.T.," ஆசிரியர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியாயின் எந்தெந்த பள்ளிக்கூடங்களிலே வேலை செய்துவரும் ஆசிரியர்களுக்கு விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது ?

20th January 1961]

(உ) எத்தனை ஆசிரியர்கள் 1960-ல் இத்திட்டத்தின் மூலம் பயனடைவார்கள்?

(எ) இத்திட்டத்திற்காக தேவையான தொகை எவ்வளவு?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir.

(இ) Elementary including Basic Schools, Secondary Schools including Post-Basic Schools, Anglo-Indian Schools and Training and other special schools.

(உ) It is not possible to give this information definitely. The annual percentage of retirement of teachers is estimated to be about 3.

(எ) The current year's budget provision is Rs. 4 lakhs.

SRI V. SANKARAN : பென்ஷன் திட்டமானது, பள்ளிக்கூடங்களிலுள்ள நான்-டீச்சிங் ஸ்டாப்-க்கு விஸ்தரிக்கப்படாமல் இருக்கிறதா? அப்படியானால் எப்போது விஸ்தரிக்கப்படும். ஏன் விஸ்தரிக்கப்படவில்லை?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆசிரியர்களுக்கு என்று ஏற்பட்ட திட்டம்; வேறு தனிப்பட்ட துறையில் உள்ளவர்களுக்கு இந்தத் திட்டத்தை விஸ்தரிப்பதற்கு உத்தேசம் இல்லை.

*Excise tax*

* 29 Q.—SRI A. P. C. VEERABAHU (on behalf of SRI K. R. NALLASIVAM and SRI M. P. SARATHI) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ராஜ்ய சர்க்கார் விதிக்கும் விற்பனை வரிக்குப் பதில் மத்திய சர்க்கார் கலால் வரி விதிப்பதுபற்றி ராஜ்ய சர்க்காரின் யோசனை கோரினரா?

(இ) ராஜ்ய சர்க்கார் கூறிய யோசனை யாது?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir.

(இ) As the correspondence between this Government and the Government of India on the question of replacement of sales tax on certain commodities by the levy of additional excise duties is treated as confidential, I regret that I am not in a position to reveal the recommendations of this Government to the Government of India in the matter.

SRI S. M. ANNAMALAI : இந்த சர்க்காருக்கு விற்பனை வரி திட்டம் மூலம் அதிகமான வருமானம் கிடைக்கிறது. இதைக்கூட மத்திய சர்க்கார் எடுத்துக் கொண்டால் இந்த சர்க்காருக்கு வேறு விதமான வருமானமே கிடையாது. ஆகவே, விற்பனை வரி எந்த இடத்திற்கும் செல்லாமல் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்